# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

சாதாரண

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

ஆடி

உ

முருகா

## அனுதைக் குழந்தைகளுக்குப் புகலிடம்

திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண குடில் தலைவர் அறிவிப்ப தாவது:

ஸ்ரீ ராமகிருஷ்ண குடிலில் உணவு, உடை, இருப்பிடம், ஹைஸ்கூல் வரை படிப்பு, தொழிற் பயிற்சி ஆகியன யாவும் முற்றும் இலவசமாய் வழங்கி அனுதைக் குழந்தைகள் காப்பாற்றப்பட்டு வருகின்றன.

ஆகையால், அனுதைக் குழந்தைகள் வாழ்வில் அக்கரையுள்ளவர்கள் தாயும், தந்தையும் இருவருமே இல்லாத திக்கற்ற ஏழை அனுதைச் சிறுவர்களைப் பற்றி மட்டுமே இங்கு முதலில் கடிதம் எழுதினுல், அதற்கான அச்சுப்பாரங்கள் அனுப்பி வைக்கப்படும். ஜுலை மாதம் இறுதிக்குள் சேர்க்க வேண்டிய சிறுவர்களைச் சேர்த்துவிட்டால் படிப்பு தடையில்லாமல் நடப்பதற்கு ஏதுவாயிருக்கும். ஆகையால் சம்பந்தப்பட்டவர்கள் காலதாமதம் செய்யாமல் விரைவில் செயல்பட முடிந்தால் நலமாயிருக்கும். 'தலைவர், ஸ்ரீ ராமகிருஷ்ண குடில், திருப்பராய்த்துறை அஞ்சல், திருச்சி மாவட்டம்' என்ற விலாசத்திற்கு எழுதி தேவையான பாரங்கள் பெற்றுக் கொள்ளலாம்.

### அன்பர்கள் கவனத்துக்கு

15-5-70 முதல் தபால் ரிஜிஸ்ட்ரேஷன் (பதிவுக் கட்டணம்) செலவு 0·75லிருந்து 0·95 ஆக உயர்ந்துள்ளது. புத்தகத்துக்குரிய விலை, தபாற் செலவு இவைகளுடன் மேற்கொண்டு 0·95 சேர்த்து அனுப்பி வைக்கவேண்டும். சில அன்பர்கள் புத்தகங்களின் விலையுடன் 0·95 மட்டும் சேர்த்து அனுப்பி வைக்கின்றனர். இது சரியல்ல. புத்தகத்தின் விலை + தபாற் செலவு + ரிஜிஸ்ட்ரேஷன் செலவு ஆக மூன்றையும் தெரிந்து சேர்த்து அனுப்பி வைக்கவேண்டும்.

---

### திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | | |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ. 3-50 |
| மற்ற நாடுகள | ... | ரூ. 5.00 |

---

### கைவசமில்லை

பின்வரும் புத்தகங்கள் கைவசம் கிடையாது. ஆகவே அந்தப் புத்தகங்களை அனுப்பி வைக்குமாறு அன்பர்கள் யாரும் பணம் அனுப்பி வைக்க வேண்டாமென்று கேட்டுக் கொள்ளுகின்றோம். மறு பதிப்பு அச்சானவுடன் திருப்புகழமிர்தம் மூலமே தெரியப்படுத்துவோம்.

1. கந்தரலங்காரம் (உரையுடன்)
2. திருவகுப்பு, கந்தரந்தாதி (உரையுடன்)—முதலியன
3. கற்புக் கனிகள் முதற் புத்தகம்
4. ஸ்ரீ சுப்ரமண்ய ஸஹஸ்ர நாமம்.

மானேஜர், திருப்புகழமிர்தம்

உ

ஓம் குஹாய நம :

# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"




| மலர் 35 | சாதாரணஞு—ஆடி மீ<br>ஜூலை 1970 | இதழ் 4 |
|---|---|---|


## திருப்புகழ்

### திருவருணை

காருமரு வும்பெருகு சோலைமரு வுங்கொடிய
காகளம டங்கவுமு ழங்கு மதனாலே
காலடர வம்பமளி மேலடர வந்துபொரு
காமன்விடு விஞ்சுகணை அஞ்சு மலராலே

ஊருமுல கும்பழைய பேருகம்வி ளைந்ததென
ஓரிரவு வந்தெனது சிந்தை யழியாதே
ஊடியிரு கொங்கைமிசை கூடிவரி வண்டினமு
லாவியக டம்பமலர் தந்தருளுவாயே

ஆருமர வும்பிறையு நீருமணி யுஞ்சடைய
ராதிபர வும்படினி னைந்த குருநாதா
ஆறுமுக முங்குரவு மேறுமயி லுங்குறவி
யாளுமுர முத்திருவும் அன்பு முடையோனே

மேருமலை யும்பெரிய சூருமலையுங் கரிய
வேலையலை யும்பகையும் அஞ்ச விடும்வேலா
மேதினியி றைஞ்சுமரு ணாபுரிவி ளங்குதிரு
வீதியிலெ ழுந்தருளி நின்ற பெருமாளே.

## பதவுரை

ஆரும்=ஆத்திமலரையும், அரவும்=பாம்பையும், பிறையும்=பிறைச் சந்திரனையும், நீரும் அணியும்=கங்கா நதியையுந் தரித்துள்ள, சடையர்=சடைமுடியுடையவராகிய, ஆதி=முதற் கடவுளாகிய சிவ பெருமான், பரவும்படி நினைந்த=புகழ்ந்து தியானித்த, குருநாதா=குருநாதரே! ஆறுமுகமும்=ஆறு முகங்களும், குரவும்=குரா மலரும், ஏறு மயிலும்=வாகனமாம் மயிலும், குறவி=வள்ளி நாயகியும், ஆளும் உரமும்=அணைந்து ஆட்சி கொள்ளுந் திருமார்பும், திருவும்=செல்வமும், அன்பும் உடையோனே=அன்பும் உடையவரே! மேரு மலையும்=மேரு கிரியும், பெரிய சூரும்=பெரிய சூரபன்மனும், மலையும்=ஏழு கிரிகளும், கரிய அலை வேலையும்=கருநிறமும் அலைகளும் உடைய கடலும், பகையும்=பகைவர்களும், அஞ்ச=அஞ்சுமாறு, விடும் வேலா=செலுத்திய வேலாயுதரே! மேதினி இறைஞ்சும்=உலகம் வணங்கும், அருணபுரியில்=திருவண்ணமலையில், விளங்கு திரு வீதியில்=விளங்குகின்ற திரு வீதியில், எழுந்தருளி நின்ற=எழுந் தருளியுள்ள, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! காரும்=மேகமும், மருவும்=வாசனையும், பெருகும்=மிகுந்து எழுகின்ற, சோலை மருவும்=சோலையில் வாழுகின்ற, கொடிய காகளம் அடங்கவும்=பொல்லாதனவாம் குயில் என்ற எக்காளம் எல்லாம் ஒன்று சேர்ந்து, முழங்கும் அதனாலே=ஒலிக்கின்ற அந்தக் காரணத்தினாலும், கால் அடர=தென்றல் காற்று நெருங்கி, வம்பு அமளிமேல் அடர=நறுமணம் வீசும் படுக்கையின் மீது செறிந்து வர, வந்து பொரு காமன்=போருக்கு வந்த மன்மதன், விடு விஞ்சு கணை=செலுத்த மேலே வந்த பாணங்களாம், அஞ்சு மலராலே=ஐந்து மலர்களாலும், ஊரும்=ஊரவரும், உலகும்=உலகத்தவரும், பழைய பேர் உகம் விளைந்தது என=பழமையான பெரிய உகாந்த காலம் வந்ததுபோல் ஆரவாரஞ் செய்வதனாலும், (தேவரீர் திருவுளம் இரங்கி) ஓர் இரவு வந்து=ஒரு இராப் பொழுதேனும் என்முன் எழுந்தருளி, எனது சிந்தை அழியாதே=என் மனம் நைந்து அழியாதபடி, ஊடி=பிணங்கியும், இரு கொங்கை மிசை கூடி=எனது இரு தனங்களின் மீது கூடி இணங்கியும், வரி வண்டு இனம் உலாவிய=இசைப் பாட்டுக்களைப் பாடுகின்ற வண்டின் கூட்டங்கள் உலாவுகின்ற, கடம்ப மலர் தந்து அருளுவாயே=கடப்ப மலர் மாலையைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

ஆத்திமலரையும், பாம்பையும், பிறைச்சந்திரனையும். கங்கா நதியையும் தரித்துள்ள சடைமுடியுடைய, ஆதிமுதல்வராகிய சிவபெருமான் பரவி நினைத்த குருநாதரே! ஆறுமுகங்களும், குராமலரும், மயில் வாகனமும், வள்ளி நாயகியும்

தழுவி ஆட்சி கொள்ளுந் திருமார்பும், செல்வமும், அன்பும் உடையவரே! மேரு மலையும், பெரிய சூரனும், ஏழு மலைகளும், கருமையும் அலைகளும் உடைய கடலும், பகைவர்களும் பயப் படுமாறு செலுத்திய வேலாயுதரே ! உலகம் வணங்கும் திரு வண்ணுமலையில் விளங்குகின்ற திருவீதியில் எழுந்தருளியுள்ள பெருமித முடையவரே ! மேகமும் வாசனையும் பெருகி எழும் சோலையில் வாழும், பொல்லாததான குயில்கள் என்ற எக்காளம் எல்லாம் ஒரு சேர ஒலிப்பதனுலும், தென்றல் காற்று நெருங்கி, மணங்கமழும் படுக்கை மேல் செறிந்து வர, போருக்குவந்த மன்மதன் செலுத்திய ஐந்து மலர்க்கணைகளாலும், ஊராரும், உலகத்தாரும் பழமையான பெரிய உகாந்த காலம் வந்தது போல் ஆரவாரம் புரிவதனுலும், என் மனம் நொந்து அழியாத வண்ணம், தேவரீர் திருவுளம் வைத்து, ஒரு இரவிலேனும் வந்து பிணங்கியும், என் இரு தனங்களைத் தழுவி இணங் கியும், இசைப் பாடல்கள் பாடுகின்ற வண்டின் கூட்டங்கள் உலாவுகின்ற கடப்பமலர் மாலையைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது. முருகன்மீது காதல்கொண்ட தலைவி அப்பெருமானிடம் கடப்ப மலர்மாலையை யாசிக்கின்ருள்.

**காரு மருவும் பெருகு சோலை:—**

கார்—கருமை. மரு—வாசனை. மரங்கள் நெருங்கி விண் ணளவு ஓங்கி வளர்ந்திருப்பதனுல் சோலை இருண்டுள்ளது. நல்ல மலர்களினுல் நறுமணம் நிறைந்து விளங்குகின்றது.

**சோலை மருவுங் கொடிய காகளம்:—**

காகளம்—எக்காளம். எக்காளம் என்பது ஒருவகை வாத் தியம். குயில் மன்மதனுடைய எக்காளம்.

மன்மதனுக்கு, வில்—கரும்பு; கணை—மலர்; நாண்— வண்டு; குதிரை—கிளி; தேர்—தென்றல்; முரசம்—கடல்; யானை—இரவு; எக்காளம்(ஊது கொம்பு)—குயில்; கொடி—மீன்! குடை—திங்கள்.

> **ஆலைக் கரும்புசிலை; ஐங்கணைபூ: நாண் சுரும்பு;**
> **மாலைக் கிளிபுரவி: மாருதந்தேர்;—வேலை**
> **கடிமுரசம்; கங்குல் களிறு; குயில்காளம்**
> **கொடிமகரம்; திங்கள் குடை.** —இரத்தினச் சுருக்கம்

**காகளமடங்கவு முழங்குமத னுலே :—**

மன்மதனுடைய எக்காளமாகிய குயில்கள் யாவும் சோலை யில் கூவுவதனுல் முருகா! என் சிந்தை வெந்து நொந்து அழி கின்றது.

**காலடர வம்பமளி மேலடர:—**

கால்—காற்று. வம்பு—வாசனை; அமளி—படுக்கை. வாசனை மிகுந்த படுக்கை மீது தென்றல் காற்று செறிந்து வருவதனுலும் என் சிந்தை அழிகின்றது.

அடர்தல்—நெருங்குதல்.

**வந்து பொரு காமன் விடு விஞ்சுகணை அஞ்சு மலராலே:—**

என்னிடம் வந்து போர்புரிகின்ற மன்மதன் விடுகின்ற அதிகமான மலர்க்கணைகள் ஐந்தினுலும் மனம் அழிகின்றேன்.

**ஊரு முலகும் பழைய பேருகம் விளைந்த தென:—**

தலைவி தலைவன் மீது காதல்கொண்டு, பித்துப் பிடித்தவள் போல், உண்ணுமலும் உறங்காமலும் இருப்பாள். இந்த நிலையைக் கண்ட ஊராரும் உலகத்தாரும், இரங்காமல் ஆங்காங்கு கூடி பலவாறு வசை பேசுவார்கள். இது அலர் எனப்படும். இவ்வாறு இவர்கள் பேசுவது பெரிய உகாந்த காலம் போல் ஒலி எழுகின்றது. ஆதலால் முருகா என் சிந்தை யழிகின்றேன்.

**ஓரிரவு வந்து:—**

"முருகா! இவ்வாறு உன்னை விரும்பிய நான் சிந்தை நொந்து அழிகின்றேன். என்மீது நீர் சிறிது திருவுள்ளம் இரங்கி, ஒரு இரவுப் பொழுதேனும் வந்து அருள்புரிக."

**ஊடி:—**

ஊடுவது—பிணங்குவது. தலைவன் தலைவியர் முதலில் ஊடி, பிறகுக் கூடுவர். ஊடுவது கூடுவதற்கு மிகுந்த இன்பம் பயக்கும்.

திருவள்ளுவர் ஊடலுவகை என்ற அதிகாரத்தில் ஊடலை அதிமதுரமாக உரைக்கின்றுர்.

> உணலினும் உண்ட தறல்இனிது; காமம்
> புணர்தலின் ஊடல் இனிது.
>
> ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம்
> கூடி முயங்கப் பெறின். —திருக்குறள்.

**வரி வண்டின முலாவிய கடம்பமலர்:—**

வரி—இசைப்பாட்டு.

வண்டுகள் தேனையுண்டு இசைப்பாடல்களைப்பாடும் இயல்புடையன.

தெனத்தெ னந்தன எனவரி யளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில் திகழ்
திருப்பரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே.
—உனைத்தினம் (திருப்புகழ்)

முருகவேளுக்கு மிகவும் உகந்த மலர் கடப்ப மலர்.

………"பூக்குங்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்கா யினி"

கடம்பமலர் தந்தருளுவாயே:—

தலைவிக்குத் தலைவன் தன் மார்பின் மலர்மாலையைத் தந்து அருளுவான்.

தலைவியாகிய அருணகிரியார் முருகனுடைய மலர்மாலையைத் தந்தருளுமாறு வேண்டுகின்றார்.

"குளிர்மாலையின்கண் அணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ"
—[விறல்மாறன்] திருப்புகழ்

ஆருமரவும் பிறையு நீருமணியுஞ் சடையர்:—

ஆர்—ஆத்தி, சிவபெருமானுக்கு ஆத்திமலர் உகந்தது.

"ஆத்திசூடி அமர்ந்த தேவனை
ஏத்தி ஏத்தித் தொழுவோ மியாமே" —ஔவையார்

பெரியவர்கள் பகைவரை ஒற்றுமைப்படுத்தி வைப்பார்கள். சந்திரனுக்கும் பாம்புக்கும் தீராப்பகை. சிவபெருமான் பகைமையுடைய சந்திரனையும் பாம்பையும் ஒற்றுமைப்படுத்திச் சடையிலே சூடியுள்ளார்.

சிவபெருமான் கங்காநதியை யணிந்திருப்பது, அவருடைய அளவில்லாத ஆற்றலையும் தூய்மையையும் உணர்த்துவது ஆகும்.

குரவு:—

குராமலர் முருகனுக்கு உகந்த மலர்.

"விரைவு குராப்புனையுங் குமாரா" —[விரகற] திருப்புகழ்

"அராப்புனை வேணியன் சேய்அருள்வேண்டும் அவிழ்ந்த அன்பால்
குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டும்"
—அலங்காரம்

**குறவி:—**

குறவன் என்ற சொல்லின் பெண்பால் குறவி. குறவர் குலத்தில் வளர்ந்தமையால் வள்ளி நாயகி குறவி எனப்பட்டாள்.

**சூரு மலையும்:—**

சூர்—சூரபன்மன். சூரபன்மன் முருகருடன் போர்புரிந்த போது மாயையில் வல்ல அசுரர் அவனைச்சுற்றி ஏழு மலைகளாக நின்றார்கள். முருகப் பெருமான் சூரனுடன் அந்த அசுரமலைகளையும் வேலினால் அழித்தருளினார்.

**மேதினி:—**

இந்திரன் வலாசுரனைக் கொன்றபோது அவனுடைய உடம்பில் உள்ள மேதை (கொழுப்பு) எங்கும் நிறைந்தபடியால் இப்பூதலம் மேதினி யெனப் பேர் பெற்றது.

## கருத்துரை

அருணைமேவும் ஐயனே! உன்னை விரும்பும் எனக்கு உன் கடப்பமலர் மாலையைத் தந்தருள்.

# திருப்புகழ்

கீத விநோத மெச்சு குரலாலே
கீறு மையார் முடித்த குழலாலே
நீதி யிலாத ழித்து முழலாதே
நீமயி லேறி யுற்று வரவேணும்
சூதமர் சூர ருட்க பொருசூரா
சோண கிரீயிலுற்ற குமரேசா
ஆதியர் காதொ ருச்சொ லருள்வோனே
ஆனை முகார் கனிட்ட பெருமாளே.

## பதவுரை

சூது அமர் சூரர் உட்க=வஞ்சனை குடிகொண்ட சூரர்களை அஞ்சும்படி, பொரு சூரா=போர் செய்த சூரமூர்த்தியே! சோண கிரீயில் உற்ற=திருவண்ணாமலையில் வீற்றிருக்கும், குமர ஈசா—குமாரக் கடவுளே! ஆதியர் காது=முதற் கடவுளாம் சிவபெருமானுடைய திருச் செவியில், ஒரு சொல் அருள்வோனே=ஒப்பற்ற சொல்லாகிய பிரணவ மந்திரத்தை உபதேசித்தவரே! ஆனைமுகார் கனிட்ட—ஆனை முகமுடைய விநாயகப் பெருமானுக்கு இளையவராகிய, பெருமாளே=

பெருமையிற் சிறந்தவரே! கீத விநோத மெச்சு குரலாலே=இராக விநோதங்கள் அமைந்தமை பற்றி மெச்சத்தக்க குரலின் இனிமை கண்டும், கீறு மையார் முடித்த குழலாலே=வகிர்ந்து வாரப்பட்டதும் கருநிறம் நிறைந்ததும் முடி போடப்பட்டதுமான கூந்தலைக் கண்டும் மயங்கி, நீதி இலாது அழித்தும்=நீதி யென்பதே இல்லாத வகையில் பொருளையும் நேரத்தையும் அழித்து, உழலாதே = அடியேன் உழன்று வீணாகாத வண்ணம், நீ மயில் ஏறி உற்று வரவேணும்= தேவரீர் மயிலின்மீது ஏறி திருவுளம் பொருந்தி வந்தருள வேண்டும்.

## பொழிப்புரை

வஞ்சனை குடிகொண்டிருக்கின்ற சூரர்கள் அஞ்சும்படி போர் செய்த சூரமூர்த்தியே! திருவண்ணாமலையில் எழுந்தருளி யுள்ள குமாரக் கடவுளே! ஆதிமூர்த்தியாகிய அரனுடைய திருச்செவியில் ஒப்பற்ற சொல்லாகிய பிரணவ மந்திரத்தை உபதேசித்த குருநாதரே! யானைமுகக் கடவுளாகிய விநாயக மூர்த்தியின் இளையவராகிய பெருமிதம் உடையவரே! இராக விநோதம் அமைந்து மெச்சத்தக்க இனிய குரலினாலும், வகிர்ந்து வாரப்பட்டதும், கரு நிறம் நிறைந்ததும் முடிந்தது மான கூந்தலினாலும் அடியேன் மயங்கி, நீதிநெறி இல்லாத வகையில் பணத்தைச் செலவழித்து வீணில் உழலாதவண் ணம், தேவரீர் மயிலின்மீது வந்து அருள்புரிய வேண்டும்.

## விரிவுரை

**கீதவிநோத மெச்சு குரலாலே:—**

கீதம்—இராகம். பண் என்ற இசை விநோதங்கள் அமைந்த இனிய குரலுடையவர்கள் பொது மகளிர்.

அந்த இனிய குரலைக்கண்டு ஆடவர் மயங்குவர்.

**கீறுமையார் முடித்த குழலாலே:—**

கீறு—கூந்தலில் இடையில் உள்ள வகிர். மை ஆர்—கருமை நிறைந்த பெண்களின் கூந்தலழகு ஆடவரை மயக்கும் ஆற்றல் உடையது.

**நீதியிலா தழித்து முழலாதே:—**

பெண் மயலில் கட்டுண்டவர்க்கு நீதிநெறி விளங்காது, இன்பம் துன்பமாகவும், துன்பம் இன்பமாகவும், பகல் இரவா கவும், இரவு பகலாகவும் காட்சியளிக்கும். அரிதில் தேடிய பொருளையும், விலைமதிக்க முடியாத வாழ்நாளையும் வறிதே செலவழித்து உழலுவர்.

**சூதமர் சூரருட்க:—**

சூது அமர் சூரர் உட்க.

சூது—வஞ்சனை. வஞ்சனை குடியிருக்கும் சூரர்கள் அஞ்சு மாறு முருகவேள் போர்புரிந்து அழித்தருளினார்.

சூது—(சூதம்) அமர் சூரர்—எனப் பிரித்து, மாமரமாய் நின்ற சூர பதுமர், என்றும் பொருள் கொள்ளலாம்.

**சோணகிரீயிலுற்ற குமரேசா:—**

சோணம்—சிவப்பு. சிவந்தகிரி அருணாசலம். இது நெருப்பு வடிவானது.

**ஆதியர் காதொருச்சொல் அருள்வோனே:—**

ஆதி—முதல்: சகல தேவர்கட்கும் முழுமுதல் சிவபெரு மான் ஒருவரே யாவார்.

"ஆதியே அடியேன் ஆதரித்தழைத்தால்
அதெந்துவே என்றருளாயே" —திருவாசகம்

**ஆனைமுகார் கனிட்ட:—**

சிவ குமாரர்கள் நால்வர்: விநாயகர், வீரபத்திரர், வைர வர், வேலவர். விநாயகராகிய மூத்த பிள்ளையாருடைய இளவல் முருகவேள்.

## கருத்துரை

திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள முருகவேளே! மாதர் மயக்கமுறாத வண்ணம் மயில்மீது வந்து அடியேனை ஆட்கொண்டருளும்.

# கற்பு

## பத்மாட்சி

"பிறர்க்கின்னு முற்பகல் செய்யில் தமக்கின்னு
பிற்பகல் தாமே வரும்."

என்பது பொய்யா மொழி. நாம் பிறருக்குத் தீங்கு செய்கின்றோம். ஆனால் அவை நமக்கு நாமே செய்து கொண்டவையாகும். ஒரு காற்றடங்கிய பந்தை சுவற்றிலே விட்டு எறிந்தால் அப்பந்து அச்சுவற்றில் பட்டு திரும்ப நம்மிடமே வரும். அதுபோல் மனத்தாலும் வாக்காலும் உடம்பாலும் பிறருக்குச் செய்கின்ற தீயவை யாவும் திரும்ப நம்மிடமே தவறாமல் வந்து எய்தும். இந்த உண்மையை நன்கு உணர்ந்தவர்கள் ஒரு போதும் மனமொழி மெய்களால் பிறருக்குத் தீமைகள் செய்யமாட்டார்கள்.

அறிவிலே தெளிவு இல்லாதவர்கள் பிறரைப் பழித்தும், பிறரது பொருளைக் கவர்ந்தும் பிறருக்குப் இடர் பல புரிந்து அகமிக மகிழ்கின்றார்கள். அந்தோ! என்னே பேதைமை?

பிறன் மனைவியைக் கழுத்தை நீட்டி விரும்பிப் பார்த்த ஒருவன், மறுபிறப்பில் கழுத்தின்றி குடத்தின்மீது சொம்பு வைத்தது போன்ற உருவுடன் பிறக்கின்றான். கற்புடைய மாதரை ஒரக்கண்ணால் கண்டவன் மறுபிறப்பில் மாறுகண்ணனாகப் பிறக்கின்றான். பிறருடைய பெருவாழ்வைக் கண்டு உள்ளம் புழுங்கிய ஒருவன், மறுபிறப்பிலே குன்ம நோயால் கொடுந்துன்பத்தை நுகர்கின்றான். பிறர்மீது இல்லாத அபவாதங்களைக் கூறுகின்றவன், மறுபிறப்பில் வாயில் புற்றுநோய் வர வருந்துவான். ஆகவே யாரும் எவ்விடத்தும் எக்காலத்தும் பிறருக்கு எள்ளளவு தீமையும் செய்தல் கூடாது.

இந்த அரிய உண்மையை விளக்குவது அடியில் வரும் வரலாறு.

பத்மாட்சன் என்ற ஓரரசன் அவனியில் மாட்சியுடன் ஆட்சி செலுத்தி வந்தான். அந்தப் பேரரசனுடைய குடை முழு மதிபோல் எங்கும் குளிர்ந்து நிழல் செய்தது. தன்னால் தன் பரிசனரால், கள்வரால், பகைவரால், விலங்குகளால் குடிகளுக்கு அணுவளவும் துன்பம் விளையா வண்ணம் தாய் போன்ற தண்ணளியுடையவனாய் விளங்கினான். அவனுடைய ஆட்சியில் கொடிய விலங்குகளும் சாதுவாக வாழ்ந்தன. பூமி உரம் இன்றி விளைவுகளை ஒன்றுக்கு ஆயிரமாகப் பெருகி நல்கியது. பசுக்கள் குடங்குடமாகப் பால் சொரிந்தன. கள்வர்களே யில்லாமையால் காவலர்கள் வேலையேயின்றி உறங்கினர்

கள். உயிர்கட்கு அந்த மாமன்னன் கண்ணுங் கவசமும்போல் திகழ்ந்தான். அப் பெருமானை வாழ்த்தாத வாயேயில்லை. அவனை வணங்காத தலையேயில்லை.

இவ்வாறு கடல் சூழ்ந்த வையக முழுவதும் பத்மாட்சன் அரசு புரிந்தான். அவனுடைய மனைவி வடமீனும் நாணுங் கற்புடையவளாய், கணவனுரது கருத்தறிந்து கடமை யுணர்வுடன் ஒழுகி வந்தாள். மன்னன் நெடுங்காலம் மகப்பேறு இன்றி வருந்தினுன்.

இறைவனுடன் எய்தும் இன்பம் சதானந்தம். குழந்தையுடன் வரும் இன்பம் சுதானந்தம். மன்னவனுக்கு மகப்பேறு கிடைக்கவில்லை. பல காலம் குழந்தை யில்லையே யென்று ஏங்கினுர். அரசாங்கத்தை அமைச்சர்களிடம் ஒப்படைத்துவிட்டுக் கானகஞ் சென்றுர். ஒரு காலிலே நின்றுர்; பொறி புலன்களை வென்றுர். திருமாலை வேண்டி அரிய பெரிய தவஞ் செய்தார். மழை பனி காற்று வெயில் முதலிய துன்பங்களைத் தாங்கிக் கொண்டார். உடம்பை மறந்து, எண்ணங்களைத் துறந்து அசைவற்றுத் தவநிலையில் ஓவியம்போல் விளங்கினுர்.

பத்மாட்சனுடைய தவத்துக்கு இரங்கித் திருமால் தோன்றியருளினுர். நீலமேக வண்ணமும், கோடி சந்திர காந்தியும், கருங்குவளை போன்ற விழியும், கரும்பு போன்ற வாயும், திருமகள் வாழும் திருமார்பும், பஞ்சாயுதமும், பீதாம்பரம் உடுத்த இடையும், மறைச் சிலம்பு ஒலிக்குந் திருவடியும் உடையவராய் நாராயணர் காட்சியளித்தார். அப்போது அமரர்கள் கற்பக மலர் மழை சொரிந்தார்கள். தேவ துந்துபிகள் முழங்கின. நாரதாதியர் பாடினுர்கள்; அரம்பையர்கள் ஆடினுர்கள்.

பரந்தாமனைக் கண்ட பத்மாட்சன் ஆனந்த வெள்ளத்தில் அழுந்தினுர். வேதங்களுங் காணுத பாதமலர் மீது வீழ்ந்தார். "அரவணைச் செல்வா! காயாம்பூ வண்ணு! கமலக் கண்ணு! பரவாசுதேவா! பரம தயாளா! கருணைக் கடலே! தேவரீரைப் புகழும் திறம் அறியேன். சிறியேனையும் ஆட்கொள்ளும் பொருட்டு எழுந்தருளிய உமது கருணைத் திறந்தான் என்னே! உமது பதமலர் போற்றி" என்று மொழி குழறித் துதி செய்தார். வேந்தனுடைய உடம்பு நடுங்கியது. புளகாங்கிதமுற்றுர்.

திருமால் "பத்மாட்சனே! உன் அன்புக்கு மகிழ்ச்சி யடைகின்றேம், உன் பேர் வாழி, உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்" என்றுர்.

பத்மாட்சன் "தாமரைக் கண்ணு! தண்துழாய் மார்பா! உன் திருமார்பில் குடிகொண்டிருக்கும் திருமகள் எனக்குப் புதல்வியாகும்

வரம் தந்தருள்" என்று கேட்டார். நாராயணர் ஒரு தெய்வீக மாதுளங்கனியை வழங்கி, வாழ்த்தி மறைந்தருளினர்.

பத்மாட்சன் மிகுந்த மகிழ்ச்சியுடன் திரும்பித் தன் அரண்மனே சேர்ந்தான். அக்கனியைத் தன் மனேவியிடந் தந்தான். அளவற்ற தவப் பெருஞ் செல்வியாகிய அம்மாதரசி மாதுளங்கனியைப் பிளந்தாள். ஒரு பாதியில் செழும் விதை மணிகளும், மற்றப் பாதியில் மாதுளம் விதை போன்ற நிறமுடைய சிறு குழவியும் இருந்தது.

அக் குழந்தையை எடுத்தாள். முகத்துடன் முகஞ் சேர்த்தாள். உச்சி மோந்து முத்தங் கொடுத்தாள். தாலாட்டி பத்மாட்சியென்று பேர் சூட்டினுள்.

அழகின் கொழுந்தாகப் பத்மாட்சி காட்சி யளித்தாள். ஐந்து வயது அடைந்ததும் சகல கலேகளேயுந் தானே யுணர்ந்தாள்.

"தந்தையே! உலகம் நிலேயில்லாதது. கதிர் மதி கடல் மலே யாவும் அழியுந் தன்மையன. தவந்தான் ஆன்மாவை யழியாமல் நிலேத்து நிற்கச் செய்யும் திறனுடையது. நான் மானுடரை விரும்பேன். கருமாலறுக்குந் திருமாலேயே மணந்து கொள்ளுவேன்" என்று கூறினுள். புதல்வியின் அருட்டிறத்தைக் கண்டு அரசன் விம்மித மடைந்தான்.

தவச்சாலே யமைத்தான். உயர்ந்த பூஜைக்குரிய பொருள்களேச் சித்தஞ் செய்தான். பத்மாட்சி வடதிசை நோக்கி யமர்ந்து, உள்ளம் உருகி, கண்ணீர் பெருகி, திருமந்திரத்தை உச்சரித்தாள். ஒருமைப் பட்ட மனத்துடன் இரவு பகலறியாது. சித்திரப் பதுமைபோல் தவஞ் செய்தாள். பல ஆண்டுகள் கழிந்தன. பத்மாட்சியின் திருமேனி தவவொளியால் விளங்கியது. அவள் முகத்தில் ஞானவொளி வீசியது.

பத்மாட்ச வேந்தன் தன் செல்வக் குமாரிக்குத் திருமணஞ் செய்ய வேண்டும் என்று கருதினுன். அரசரின் முறைப்படி சுயம்வரம் நியமித்தான். மன்னர்களுக்கு அழைப்பு அனுப்பினுன். மலரை நோக்கி வண்டுகள் வருவதுபோல் மன்னர் குழாம் திரண்டு வந்தது.

மன்னர் பெருமான் தன் மகளிடம் வந்து, "என் செல்வக் குமாரி! உனக்குத் திருமணப் பருவம் எய்தியுளது, என் அழைப்பின்படி உன்னே விரும்பி மன்னர்கள் திரண்டு வந்திருக்கின்றூர்கள், நீ மலர் மாலேயுடன் வருக. மன்னர்களேப் பார்த்து உனக்கு விருப்பமான மன்னனுக்கு மாலே சூட்டுவாயாக" என்றுன்.

பத்மாட்சி இந்த வார்த்தையைக் கேட்டுத் திடுக்கிட்டாள். "அன்புள்ள அப்பா! இது என்ன விபரீதம்? நான் திருமாலே விரும்பித் தவம் புரிகின்றேன். என் கணவர் திருமால். மனிதர்கட்கு நான்

மாலை சூட்டேன். என் உள்ளத்தை யுணராது நீர் எப்படி சுயம்வரம் ஏற்பாடு செய்யலாம்? ஆகவே வந்த மன்னர்களை வந்த வழியே திரும்பிப் போகச் சொல்லும்" என்றாள்.

மன்னன் மனம் திகைத்தது. "ஆ! நான் சிறிதும் மதியிலாது இந்த பெரிய ஏற்பாட்டைச் செய்துவிட்டேனே; இப்போது நெடுந் தொலைவிலிருந்து வந்தவர்கட்கு என்ன உத்தரம் சொல்லுவது? வேந்தர்கள் வீணே என்னைப் பகைப்பார்களே. எள்ளி நகைப்பார் களே" என்று பலப்பல சிந்தித்தான்.

பத்மாட்சன் சுயம்வர மண்டபத்தை யடைந்தான். நன்கு தங்களை அலங்கரித்துக் கொண்டு தத்தம் ஆசனங்களில் நட்சத்திரக் கூட்டங்களைப் போல் அமர்ந்துள்ள அரசர்களைப் பார்த்துப் பின்வரு மாறு கூறுவானாயினன்.

"வேந்தர்களே! வணக்கம். என் மாதவத்தால் தோன்றிய மாணிக்கமாகிய மகளுக்கு ஒரு விரதம் உண்டு. வானில் தெரியும் நீல நிறத்தை எடுத்து எவன் உடம்பில் பூசிக்கொள்ளுவானோ? அவனுக்கு என் மகள் மலர் மாலை சூட்டுவாள்" என்றான்.

இதனைக் கேட்ட அரசர்கள் திகைத்தார்கள். ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். இது ஆகின்ற செயலா? வானில் தெரியும் நீலநிறத்தை அள்ள முடியுமா? ஆகாத காரியத்தை இந்த அரசன் கூறி நம்மை அலட்சியம் புரிகின்றான். ஆதலால் இவனை எளிதில் விடக்கூடாது. நாம் எல்லோரும் ஒன்று திரண்டு, இவனை வதை செய்து, நம்மில் ஒருவர் பத்மாட்சியை மணந்து கொள்ளு வோம் என்று வீர வசனம் புகன்றார்கள். ஐம்பத்தாறு தேயத்து மன்னர்களும் எரிமலைபோல் கொதித்து எழுந்தார்கள். வில்லும் வாளும் கதையும் எடுத்து பத்மாட்சனை எதிர்த்துப் போர் புரிந் தார்கள்.

பத்மாட்சன் நாராயணனைத் தியானித்து தன் பரிவாரங்களுடன் வில்லேந்தி வீரப்போர் புரிந்தான். லட்சுமியின் திருவருளால் கடும் போர் புரிந்தான், எதிர்த்த மன்னர்கள் அரசன் முன்னே வந்து பூனை கள்போல் தோற்று மூலைக்கு ஒருவராக ஓடி ஒளிந்து போனார்கள். பத்மாட்சன் வாகை மாலை சூடினான்.

பத்மாட்சி முன்போல் தவம் புரிந்து கொண்டிருந்தாள். ஒரு நாள் புஷ்பக விமானத்தில் வடதிசை நோக்கிச் சென்ற இராவணன் பத்மாட்சியைப் பார்த்தான். மையல் கொண்டான். அவளை அடைய விரும்பினான்.

பத்மாட்சனிடம் சென்று "உன் புதல்வியை எனக்குத் தருவா யாக" என்றான். பத்மாட்சன் இராவணனைப் பார்த்து "இலங்கேசா!

என் மகளின் விரதம், வானில் தெரியும் நீலநிறத்தை எடுத்து உடம்பில் பூசிக் கொள்பவனை மணப்பதாய் உறுதி கொண்டிருக்கின்றாள்" என்றான்.

இராவணன் இந்த மொழியைக் கேட்டு சீறினான். "முடியாத கருமத்தைச் சொல்லும் மூடனே! நீ முடிந்து போ" என்று கூறி தன் வடிவாளினால் பத்மாட்சனை வெட்டினான். பத்மாட்சன் பரமபதம் அடைந்தான். தவக்கூடம் போய் பத்மாட்சியை எடுத்துச் செல்ல ஓடினான். அங்கு பத்மாட்சி காணப்படவில்லை. வீடெங்கும் தேடியும் கிடைக்கவில்லை. ஏமாந்து திரும்பிச் சென்றான்.

சில காலத்துக்குப் பின் அவ்வழியே விமானத்தில் சென்றுகொண்டிருந்த இராவணன் முன்போல் பத்மாட்சி தவம் புரிந்து கொண்டிருப்பதைக் கண்டான். அவளை எடுக்க ஓடினான். "நாராயணா?" என்று பத்மாட்சி மறைந்துவிட்டாள்.

மற்றொரு நாள் இராவணன் அவ்வழியே சென்றவன் பத்மாட்சியைப் பார்த்தான். அவளைப் பற்றச் சென்றான், அவள் மறைந்துவிட்டாள்.

இராவணன் வெகுண்டு அந்த நகரத்தை நெருப்பை மூட்டி எரித்தான். * சில காலத்துக்குப் பின் அவ்வழியே இராவணன் சென்றான். எரிகின்ற தீயின் அருகில் பத்மாட்சி பதுமாசனத்துடன் தவம் புரிவதைக் கண்டான். இராவணன் அவளைப் பற்றச் சென்றான். "நாராயணா!" என்று அவள் தீயில் வீழ்ந்து மறைந்தாள். இராவணன் தண்ணீர் விட்டு அணைத்துத் தேடினான். ஒரு சிறந்த மாணிக்கங் கிடைத்தது. அதனை மனைவி மண்டோதரிக்குத் தரவேண்டும் என்று பெட்டியில் வைத்துக் கொண்டான். பின்னை மறந்துவிட்டான்.

சில காலத்துக்குப் பின் நினைவு கூர்ந்தான். "மண்டோதரி! உனக்கு மாணிக்கங் கொணர்ந்தேன். தர மறந்துவிட்டேன்" என்று கூறிப் பெட்டியைத் திறந்தான். அதில் ஒரு பெண் குழந்தையிருந்தது.

இராவணன் ஆ? என்று அலறினான். "மண்டோதரி! இவள் பத்மாட்சி, இவளை நான் காதலித்து இவள் தந்தையைக் கொன்றேன். இவள் தோன்றுவதும் மறைவதுமாக என்னை ஏமாற்றினாள். இவளது நகரை எடுத்தேன். இவள் நெருப்பில் மறைந்து மாணிக்கமானாள். அம்மாணிக்கத்தை இப்பெட்டியில் வைத்துக் கொணர்ந்தேன். உடனே உனக்கு எடுத்துக் கொடுக்க மறந்தேன். இப்போது இவள்

---

* பத்மாட்சியின் நகரத்தை எரித்த தீவினையினால் இலங்கை அநுமனால் எரிந்தது. "அவ்வினைக்கு இவ்வினை".

குழந்தையாகக் காட்சியளிக்கின்றாள். இவளை வெட்டியெறிவேன்" என்று வாளை எடுத்து ஓங்கினான்.

மண்டோதரி தன் கணவன் கையைப் பிடித்துத் தடுத்தாள். "இலங்கை வேந்தே! பலமுறை தோன்றி மறைந்த இவள் இப்போதே உம்மைக் கொல்லவுஞ் செய்வாள். இவளால் உமக்கு மரணம் நேரும். எனக்கு அச்சமாக இருக்கின்றது. கொல்லாதீர்கள்" என்றாள்.

"அன்புள்ளவளே! இவளை என்ன செய்யட்டும்? சொல்" என்றான். "அப்படியே பெட்டியைப் பூட்டிப் புதைத்துவிடுங்கள்" என்றாள் மண்டோதரி.

இராவணன் மனைவியின் சொற்படி பெட்டியைப் பூட்டி தன் ஏவலர்களிடம் தந்து, "இமயமலைச் சாரலில் பூமிக்குள் புதைத்து விடுங்கள்" என்றான். அவ்வண்ணமே அவர்கள் இமயமலைச் சாரலில் புதைத்துவிட்டார்கள். அப்பெட்டியில் இருந்த குழவி மறைந்து விட்டது, இலக்குமி தோன்றுவதும் மறைவதும் இயற்கைதானே.

பன்னெடுங்காலத்திற்குப் பின், மிதிலை வேந்தர் ஜனகராசன் அங்கு புத்திரகாமேஷ்டி யாகம் புரியப் பொற்கொழுவால் உழுத போது அப்பெட்டி கிடைத்தது. திறந்து பார்த்தான். அதில் திருமகள் குழந்தையாகக் காட்சியளித்தாள். உழுகின்றபோது கிடைத்த தொழுகின்ற பெண் தெய்வமாகிய அவளுக்குச் சீதை யென்று பேர் சூட்டி வளர்த்தார்.

சிலர் இலங்கையில் பிறந்தாள் என்றும், ஜோதிடம் பார்த்த போது இக்குழவியால் இலங்கை அழியும் என்றும் ஜோதிடர்கள் கூறினார்கள் என்றும், இராவணன் அக்குழந்தையைப் பெட்டியில் வைத்துக் கடலில் விட்டதாகவும், அப்பெட்டி மிதிலையில் கரை தட்டியதாகவும் கூறுவர். இது பொருந்தாதது. ஏன்? கடலில் இட்ட பெட்டி கடல் ஓரம் உள்ள நகரில்தானே கரை தட்டும். இமயமலைச் சாரலில் உள்ள மிதிலையில் எவ்வாறு கரை தட்டும்? ஆகவே இது பொருந்தாதது என வுணர்க.

சீதை முற்பிறப்பில் பத்மாட்சி. அப்பிறப்பிலேயே அவளை விரும்பிய இராவணன் மறு பிறப்பிலும் விரும்பலானான். பத்மாட்சியின் பட்டினத்திற்கு தீ வைத்த தீமையால் கதிரவன் நுழைய அஞ்சும் இலங்கையில் தீ நுழைந்து எரித்தது.

ஆதலால் நாம் பிறருக்குச் செய்த தீமை நம்மையே வந்து நணுகும் என வுணர்க.

முருகா

# மகாபாரதம்

## சாந்தி பர்வம்

### மோக்ஷ தர்மம்

72ஆம் பக்கத் தொடர்ச்சி

தருமபுத்திரர், "அறிஞர் பெருமானே! எது நன்மை என்பதை எனக்குச் சொல்லும். அமுதத்துக்கு ஒப்பான தங்கள் வார்த்தைகளைக் கேட்பதில் எனக்குப் போதும் என்ற திருப்தி யுண்டாகவில்லை" என்றார்.

பீஷ்மர் "அஜாதசத்துருவே! ஜனகருக்குப் பராசரர் கூறிய கீதையை உனக்குக் கூறுகின்றேன். ஒருமுகமாகக் கேள். பெரும் புகழ்பெற்ற ஜனகர், "இகத்திலும் பரத்திலும் சகல வுயிர்களுக்கும் எது எது நன்மையைத் தருவதோ? எது அறிய வேண்டுவதோ? அதை நீர் எனக்குச் சொல்லும்" என்று கேட்டார். தவத்தில் சிறந்தவரும், எல்லாம் அறிந்தவருமாகிய பராசரர் கருணையுடன் கூறுவாராயினர்

"ஜனக! தன்னால் செய்யப்பட்ட தருமமே இகத்திலும் பரத்திலும் நன்மையைத் தருவது. அதைவிட மேலானது இல்லை. விதையின்றி எதுவும் விளைவதில்லை. அதுபோல் நல்ல கர்மாவைச் செய்யாமல் சுகம் உண்டாவதில்லை. அடக்கம், பொறுமை, தைர்யம், வலிமை, மகிழ்ச்சி, உண்மை, நாணம், கொல்லாமை, சோகமில்லாமை, சாமர்த்தியம் என்னும் இவைகள் சுகத்தைத் தருகின்றன. எல்லாவற்றையும் புசிக்கின்ற அந்தணனும், அச்சப்படுகின்ற அரசனும், பொருள் வருவாயில் விருப்பமில்லாத வைசியனும், சோம்பேறியான வேளாளனும், ஒழுக்கமில்லாத புலவனும், ஆசாரக் குறைவுள்ள உயர் குலத்தவனும், ஆசையுள்ள யோகியும், தனக்காகச் சமையல் செய்கின்றவனும், சபையில் பேசும் மூடனும், அரசனில்லாத நாடும் துன்பத்தை யடைகின்றார்கள்.

தனமுள்ளவன் தக்கவருக்குத் தானஞ் செய்யவேண்டும். ஒன்றுமில்லையேல் கீரையையேனும் வெந்நீரையேனும் பசியால் களைத்தவனுக்குத் தரவேண்டும். ரந்திதேவன், சைப்யன் என்ற அரசர்கள் அறஞ் செய்து உயர்கதியைப் பெற்றார்கள். பிராம்மணன் அடக்கத்தாலும், அரசன் வெற்றியினாலும், வைசியன் செல்வத்தினாலும், வேளாளன் திறமையாலும் விளங்குகின்றார்கள்.

சிறந்த தவஞ் செய்ய வேண்டும், எல்லா நலன்களுக்குந் தவந்தான் காரணம். உலகில் அரசர்களாகவும், சிறந்த குலத்திலும், பிறப்

பதற்குக் காரணம் தவந்தான். பட்டாடை, நல்ல அணிகலன்கள், வாகனங்கள், உயர்ந்த ஆசனங்கள், இனிய பானங்கள், இவைகளை ஒருவன் பெறுவது தவத்தின் பயனேயாகும். உத்தம மனைவியும், நற்குணமுள்ள பிள்ளைகளும் சூழ மாடமாளிகையில் ஒருவன் வாழ்வது அவன் முன் செய்த தவத்தின் பயனேயாகும். நல்ல தவஞ் செய்யாதவர்கள் சுகத்தைப் பெறுவதில்லை. மனிதனுக்கு சாத்திரமே நேத்திரமாகும்.

ஒரு மனிதனுக்கு வினைகளின் நுகர்வு முடிந்தவுடன் மரணம் நேரும். நதி தீரத்தில் மரணம் நேர்வது நல்லது. தற்கொலை செய்து கொள்வது பெரும் பாவமாகும். தற்கொலை செய்து கொண்டவன் பேயாகி அலைந்து பெருந்துன்பமடைகின்றான்.

எதை நினைத்து மரணம் அடைகின்றானோ அவனுக்கு அந்தப் பிறப்பு நேர்கின்றது. ஞானிகளின் சிரத்தைப் பிளந்து கொண்டு ஆத்மா ஜோதி வடிவாகப் புறப்பட்டுப் போகும். பாவிகளுடைய உயிர் கீழ்நோக்கிச் செல்லும். குறுக்காக வளரும் ஊர்வன பிறப்பைக் காட்டிலும், நாற்காற் பிறப்பு உயர்ந்தது. நாற்கால் பிறப்பினும் இரு காற் பிறப்பாகிய மனிதப் பிறப்பு உயர்ந்தது. மனிதப் பிறப்பிலும் அந்தணனாகப் பிறப்பது உயர்ந்தது. அந்தணனாகப் பிறப்பதிலும் அறிஞனாகப் பிறப்பது உயர்ந்தது. அறிஞனாகப் பிறப்பினும் மெய்ஞ்ஞானியாகப் பிறப்பது உயர்ந்தது.

எத்தனை எத்தனையோ பிறப்புக்களில் செய்த நல்வினைப் பயனால் மனிதனாகப் பிறக்கின்றான். அப்படிப் பிறந்தவன் தீவினைகளைச் செய்து மறுபடியும் குறுக்கே வளரும் பிராணியாகப் பிறப்பது மிகவும் வருந்தத்தக்கது.

பற்றற்றிருப்பது நன்மைக்குக் காரணம். நல்ல நிலத்தில் விதைத்த விதை ஒன்றுக்கு ஆயிரமாக விளைவதுபோல் உயர்ந்த ஞானிகட்கு ஈந்த தானம் பெரும்பயன் தருகின்றது. ஞானிகள் குடும்பத்திலிருந்தாலும் குடும்ப வாசனை அவர்களைப் பற்றுவதில்லை. தண்ணீரில் இருந்தாலும் தாமரை யிலையில் தண்ணீர் ஒட்டுவதில்லை. அரக்கானது கட்டையில் ஒட்டுவதுபோல், அறிவில்லாதவனைப் பாவம் பற்றிக் கொள்ளுகின்றது. நெடுந்தூரப் பயணத்தில் உதவுகின்ற கட்டமுதைப்போல் தான் செய்த தானதருமம் மறுமையில் வந்து உதவுகின்றது. ஆதலால் மனிதன் பற்றை யறுத்து பரம்பொருளை யடைய வேண்டும்'' என்று கூறினார். ஜனகர் இதனைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்தார்'' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், ''பிதாமகரே! உண்மை. அடக்கம், பொறுமை, ஞானம் இவைகளை அறிஞர்கள் புகழ்கின்றார்கள். இதில் தங்கள் கருத்து யாது?'' என்று கேட்டார். பீஷ்மர் கூறுகின்றார்.

## சாத்தியரும் அன்னமும்

முன்னொரு காலத்தில் பிரமதேவர் பொன்மயமான அன்னப் பறவை யுருவங் கொண்டு மூன்று உலகங்களிலும் உலாவினார். சாத்தியர்கள் என்ற தேவர்கள், அந்த அன்னத்தைப் பார்த்து "எல்லாம் அறிந்த அன்னமே! எல்லாவற்றிலும் சிறந்தது எது? எதனால் விடுதலை கிடைக்கும்?" என்று வினவினார்கள்.

அன்னம் "தவம், * தமம், சத்தியம், மனவடக்கம் என்ற இவைகள் செய்யத்தக்கவை. இன்சொல் எல்லா நலன்களையும் தரும். வாயிலிருந்து புறப்படும் கடுஞ்சொல் என்ற அம்பு உள்ளத்தைப் பிளக்கின்றது.

உத்தமர்கள் பிறர் கூறும் கடுஞ் சொற்களைப் பொறுக்கின்றார்கள். கடுஞ் சொல் கூறினவனுடைய புண்ணியம், பொறுத்துக் கொண்டவனிடம் சேருகின்றது. வைதாலும் அடித்தாலும் பொறுமையுடன் இருப்பவன் பெருமை யடைகின்றான். வைதவனுடைய பாவத்தை மன்னிக்குமாறு இறைவனை இறைஞ்சுகின்றான் உத்தமன். மனத்தின் வேகம், வாக்கின் வேகம், வயிற்றின் வேகம், ஆசையின் வேகம் ஆகிய வேகங்களை வென்றவனே ஞானி. பொறுத்தவனுடைய பொறுமை வைதவனை எரிக்கின்றது. இந்தப் பொறுமையிலும் மேலான தவம் இல்லை.

சினம் உள்ளவன் செய்யும் யாகத்தையும் தானத்தையும் தவத்தையும் முழுதும் யமன் கொண்டு போய் விடுகின்றான். குறிகள், வாக்கு, கரங்கள், வயிறு என்ற இந்த நான்கையும் அடக்கிக் காப்பவனே தருமமுணர்ந்தவன்.

யோகிகள் யவை மாவை ஒரு வேளை யுண்டு யோக நெறியில் நின்று ஞானத்தை யடைந்து பிறவாமையைப் பெறுகின்றார்கள்.

தேவர்களே! கன்றானது தாயின் நான்கு முலைகளையும் பார்ப்பது போல், எல்லா வேதங்களையும் பார்த்ததில் சத்தியத்தைவிட உயர்ந்தது வேறு ஒன்று இல்லை. முத்தி யுலகுக்குச் சத்தியம் படியாக நான் உணர்கின்றேன்.

தேவர்கள், "அன்னமே! இந்த வுலகம் எதனால் சூழப்பட்டிருக்கின்றது? எதனால் ஒளி செய்வதில்லை? எதனால் நட்பினரை விடுகின்றது? எதனால் சுவர்க்கத்தை அடைகின்றதில்லை?" என்று கேட்டார்கள்.

அன்னம் "உலகம் அறியாமையால் சூழப்பட்டிருக்கின்றது. மத்சரத்தால் ஒளி செய்வதில்லை; உலோபத்தால் நண்பரை விடுகின்றது. பந்தத்தினால் சுவர்க்கத்தை அடைகின்றதில்லை" என்று கூறியது.

---

* தமம்—ஐம்பொறி யடக்கம்.

# ஆலயம்

## தமிழறிஞர் மோகனூர் க. முத்துசாமி பிள்ளை

ஓர் ஊரில் செல்வம் அதாவது திருமகள் மகிழ்ந்து தாண்டவம் புரிய வேண்டுமானல், அவ்வூரில் சில ஆலயங்களாவது அமையவேண்டும். கோவில் இல்லாத ஊரைத் திருநாவுக்கரசர் "அடவி காடே" (சுடுகாடு) திருக்கோவில் இல்லாத ஊர் எனக் கூறுவர். நமது உள்ளம் போல்வது கோயில், உடம்பு போல்வது ஆலயமாகும்.

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்" என்பது திருமூலர் திருமந்திரம். 'ஆலயம்' என்பது வடசொல், உயிருக்கு உயிராகிய கடவுள் உறைவிடம் என்று அதற்குப் பொருள்.

பாலில் நெய் மறைந்திருப்பதுபோல் எங்கும் நிறைந்த கடவுள் நம் கண்ணில் படாமல் ஒரு கள்வனேபோல் மறைந்திருக்கிறான். ஆனல் பக்தர்களுக்கும் ஞானிகளுக்கும் கடைந்த தயிரில் வெண்ணெபோல் வெளிப்பட்டு அருள்புரிகிறான். இவ்வாருக இறைவன் பக்தர்களுக்கு, எளியனும், மற்றையோருக்கு அரியனும் ஆகின்றான்.

இத்தகைய கடவுளை ஆலயம் அல்லாத மற்ற இடங்களிலும் சிந்தித்து வாழ்த்தி வழிபட்டு வினைகளை வெதுப்பி நீருக்

---

தேவர்கள், "அன்னமே! எவன் மகிழ்ச்சியை யடைகின்றான்? எவன் பலருடனிருந்தும் மௌனமாயிருக்கின்றான்? எவன் வலிமையற்றவனுயிருந்தாலும் வலிமையுள்ளவனுயிருக்கின்றான்? எவன் மனிதர்களுடைய சண்டையில் சேராமலிருக்கின்றான்?" என்று கேட்டார்கள்.

அன்னம் "பேரறிவுள்ளவன் மகிழ்ச்சியாக இருக்கின்றான்; பேரறிவுள்ள ஒருவன் பலருடனிருந்தும் மௌனமாக இருக்கின்றான், பேரறிவுள்ள ஒருவன் வலிமை யற்றவனுயிருப்பினும் வலியவனுக இருக்கின்றான். பேரறிவுள்ளவன் உலகத்தவர்களின் கலகத்தை அனுசரிக்காமலிருக்கின்றான்" என்று கூறியது.

அன்ன வடிவமாக இருந்த பிரமதேவருடன் சாத்தியர்கள் தேவலோகஞ் சேர்ந்தார்கள். சாத்தியர்களுக்கும் அன்னத்துக்கும் நடைபெற்ற ஸம்வாதத்தை உனக்குக் கூறினேன்" என்று பீஷ்மர் கூறினர்.

(தொடரும்)

கலாம். அஃது கல்லில் நார் உரிப்பதைப் போலக் கடினமான ஒரு செயலாகும்.

அறவோர்க்கும், மறையோர்க்கும் ஆண்டவன் அண்மையன் மறவோர்க்கும் மற்றையர்க்கும் சேய்மையன். திருக்கோயில் திருவுருவங்கள் வானவர், தானவர், முனிவர், நால்வர், ஆழ்வார் இவர்களால் நிறுவப்பெற்ற காரணத்தாலும் சித்தர்களால் வணங்கப் பெற்றமையாலும் கோயிலின் கண் எங்கணும் பரசிவ வெள்ளம் ததும்பிப் பாய்ந்து கொண்டிருக்கும்; அங்குச் சென்றுதான் பரசிவ வெள்ளம் பருகி ஆண்டவன் திருவருள் பெற முடியும்.

"மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே."

என்பது சிவஞான போதம், ஔவையும் "ஆலயந் தொழுவது சாலவும் நன்று" என்று அருளியிருக்கிருர்.

ஆலயம் சென்று வழிபடுவதால் குற்றம் நீங்கும். குணம் சாரும். வேந்தர் அச்சம் ஏகும். மரண பயம் செல்லும்; பெருநோய் பயம் அகலும். ஆகவே பேரின்பப் பெருவாழ்வைப் பெறலாம் என்பது துணிபு. மார்க்கண்டேயர், அப்பர் முதலானோர் தக்க சான்ருவார்.

பண்டைய மன்னவர் கோடிக் கணக்கில் செலவு செய்து கோயில்களைப் புதுக்கினர். வானளாவும் கோபுரமும், ஆயிரக்கால் மண்டபமும் அமைத்தனர். நவமணிகளால் அணிகலன்களும் அமைத்தனர் ஆயினும், கடவுள் திருவுருவங்களை ஏன் கல்லினுல் சமைத்தனர். கல்லினுள் நெருப்பு அதிகம் தங்கியுள்ளது. எனவே அருட்சோதி கல்லிடம் அமைகின்றது.

கோவிலைப் புதுக்கும்போது, மறையவர் வேட்கும் வேள்வித் தீயில் வந்து உறைகிருன் இறையவன். அவ்வேள்விக் கூடத்தினின்றும் ஒரு வெள்ளிக் கம்பி சென்று, கருவறையில் உள்ள கடவுள் திருவுருவான கல்லினை அடையும். ஆலயம், இறைவன் திருவருள் பொழியும் மேகமென விளங்கும். மின்னலெனத் தோன்றி மறையும் வாழ்வுக்கு மின் ஆற்றலை சரிவர பயன்படுத்த இயலாது தவிக்கும். இன்றைய விஞ்ஞானியரிலும், சச்சிதானந்தமாம் நிலைபேரின்பம் நல்கும் இறைவன் திருவருள் ஆற்றலையே கம்பி மூலம் பாய்ச்சும்திறம்கண்ட மெய்ஞ்ஞானியர் எத்தனை மேலானவர்!

அதனுல் ஆலயம் சிறப்படைய ஊர் நலம் அடையும் என்பதும், கோயில் விளங்கக் குடிவிளங்கும். என்ற முதுமொழி உண்மை என்பதும், ஆலய வழிபாடு அவசியம் என்பதும் வெளியாகும்.

'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'.

முருகா

# நாச்சிக்குறிச்சி சித்திவிநாயகர் பதிகம்

நேரிசை வெண்பா

சீதேவி நேயனயன் சிந்திக்குஞ் சிற்பரனே
ஆதேய மாகவரு ஐங்கரனே—மாதே
விநாயகனே யஞ்செய் விமலனே சித்தி
விநாயகனே யாள்வாய் விரைந்து.

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருவருட் கோவைத் தெய்வமா மணியைச்
செஞ்சடைப் பரசிவக் கொழுந்தைக்
கருணையங் கடலைக் கற்பகக் கனியைக்
கற்றவர் கைதொழுந் தேவை

அருணிதி யரசை அமரர்நா யகனை
ஐங்கரத் தானைமா முகனை
விருதொலி நாச்சிக் குறிச்சிவாழ் சித்தி
விநாயகக் கடவுளை விழைவாம்.

நேரிசை வெண்பா

ஆறு திருமுகமும் ஆறிருதோ ளுந்தாளும்
ஏறு மயிலும் எழில்வேலும்—வீறுபெற
நின்றுதுணை செய்வதால் நீடுலகில் அன்றுமின்றும்
என்றுமெனக் கில்லை இடர்.

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சீருலவு சிவஞான வேழமே சிவயோக
சிற்பரசி தாகாசமே
சிவபோக முதவுதே சோமயா னந்தமே
சித்தாந்த முத்திமுதலே

நாருலவு மொருகோட் டிரண்டுசெவி முக்கண்ண
நால்வாய ஐந்துகரனே
நல்லாறு திகழ்ந்தினிமை யெழுமறைக் கெட்டரிய
நவநாத பத்தரரசே

பாருலவு பதினொன்றை வென்றவொரு பன்னிருவர்
பரவிமகிழ் பரமகுருவே
பாசாங்கு சக்கர பவக்கடல் புகாதெனைப்
பரிந்தருள் மாடமீதில்

காருலவு நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே

கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே. 1

அலையோங்கு கடலைவாய் மடுத்து மலயத்துறை
யருந்தவன் கமண்டலத்தை
ஆகண்ட லன்தொழக் காகவுருக் கொண்டுகவிழ்த்
தருள்புரி யநந்தகுணனே
உலையோங்கு தழலன்ன வொளியோங்கு மேனிய
உலாவுதய ஞானபாநு
ஓங்கார வடிவுடைப் பரமமூ லாதாரத்
துறையுமெங் கணநாதனே
மலையோங்கு விற்கர னிடத்தமரு மலைமங்கை
மனமகிழ் குமாரமணியே
மதியுருவ மேதெய்வ மாணிக்க மேஓல
மறைகளறை கின்றஒன்றே
கலையோங்கு நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே
கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே. 2

நாமநீ ருலகினினை நினையாத வொருகரும
நலமுற நடப்பதில்லை
நகைத்தொரு புரத்ரய மெரித்தவர் நடத்துதேர்
நல்விரி சிறுத்ததீர
ஏமநல் வெற்பினி லறம்பல நிரம்பிவள
மிலகுகுரு குலவேந்தரின்
இனிமைமிகு சரிதையை வியாசமுனி யரசுசொல
எழுதியருள் ஏகதந்த
பூமருவு மிருவரின் கொழுநரும் போற்றிசெயும்
போதாந்த புனிதமூர்த்தி
புத்தமுத மேஞான போகமன் பர்க்குதவு
பூரண னந்தவாழ்வே
காமருவு நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே
கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே, 3

வானவரெ லாம்போற்ற வாரணமு காசுரனை
மாய்த்தருள் வழங்குவரத
மனுபுகழ் தக்கனுக் கின்னருள் புரிந்தமா
மழைமத கரிக்கடவுளே

தேனகு மலர்க்குழ விலக்கணசுந் தரிதொழத்
திருவருள் புரிந்ததேவே
சிந்தைசெயு மடியவர்கள் பந்தனை யறுத்தறிவில்
தித்திக்குந் தெள்ளமுதே

தானமிகு திருவலஞ் சுழிவாழ் விநாயகா
தற்பர சிவானந்தமே
தண்பொழில் வளங்குலவு வயலூ ரெனுந்திருத்
தலத்தினைச் சார்ந்துவேத

கானமிகு நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே
கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே 4

வெற்புலவு சிறுமிதனை வேலுடைப் மரமபதி
வேட்டுள முவக்குமாறு
வேழவுரு வாய்வந்த விபுதர்கள் சிகாமணி
வேதாக மாதிமுதலே

புற்புதம் பொருவுமிப் பொய்யுடலை மெய்யென்று
பூதல மெலாமலைந்து
பொருளீட்டி பாழ்ங்கும்பி தனைவளர்த் தலைகின்ற
புலையனேன் தன்னையாள்வாய்

கற்பனை கடந்தமெய்க் கருணையங் குன்றமே
கற்றவர் விழுங்குகனியே
கற்பகத் திடர்நீக்குங் கற்பக விநாயக
காமர்க் கருங்கண்ணினர்

கற்புமிகு நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே
கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே 5

எந்தைநின திருவுருவை இதயத்தி லெழுதினுன்
இன்பமுற நோக்கியறியேன்
இரவுபக லற்றநல் லிடமருவி சலனமற
ஏகாந்த மாகியறியேன்

பந்தபா சங்களறப் பசுகரண மறநீங்கி
பதிகரண முறவுமறியேன்
பார்த்தவிட மெங்குநின் பரவெளியைக் கண்டுமெய்ப்
பதமேவு விதமுமறியேன்

சிந்தையழன் மெழுகாகி நினதுதிருப் புகழ்பாடித்
தீவினை தீர்க்கஅறியேன்

சிவநெறி மறந்துவீ ணவநெறி புகுந்துழலுந்
தீயனெவ் வகையிலுய்வேன்
கந்தமிகு நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே
கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே. 6

புவியெலாம் போற்றுநின் புகழினைப் புகழாத
புன்புலாற் புலையனானேன்
பூவளந் தவனாதி புத்தேளிர் போற்றிசய
போற்றியென் றேத்தியங்கை
குவியநின் சந்நிதியில் கூடிநிற் பதுகண்டுங்
கொடியனேன் அடிமைபூணேன்
கும்பமுனி யடிபரவு குணக்குன்ற மேயருட்
கோடாத மணிவிளக்கே
சிவிகையிவர் பவரையுந் தாங்குனரை யுங்கண்டுஞ்
சிறிதறஞ் செய்தேனிலை
தேவநா யகஅடிமை செய்பிழை பொறுத்துனது
திருவருள் வழங்கியாள்வாய்
கவிபரவு நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே
கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே. 7

அருணல மிகுந்தநற் சேந்தனது சிறைதீர்த்த
அண்ணலே அருளாழியே
அடிமை யினுடற்சிறை தீர்த்துனது சிவஞான
அடிமல ரளித்தருளுவாய்
மருணலியு மெய்கண்ட தேவர்க்கும் நம்பிக்கும்
வான்பொரு ளுரைத்தவாழ்வே
வல்லபை மணாளனே மாணிக்க தீபமே
மறைபரவு வரதமணியே
பொருணல மிகுந்தசெந் தமிழவ்வை நம்பிக்கை
பூணநின் தும்பிக்கையால்
புனிதமிகு கயிலையிற் புகவருளும் புண்ணிய
புராணனே புங்கமூர்த்தி
கருணைநிறை நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே
கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே. 8

தன்னலமி லாதுலகை மன்னுயிரை யோம்புமுயர்
சன்மார்க்க ராளவேண்டும்
தற்பரா னந்தநின் தாண்மலர் தனைக்கருதி
தவமுறைத் தியானம்வேண்டும்
நன்னல மிகுந்தெவரு நடுநிலையில் நிற்கின்ற
நல்லறந் தழையவேண்டும்
நவையறு கலைச்செல்வ மோங்கவேண். டுங்கொண்டல்
நலமுடன் பொழியவேண்டும்
இன்னலொரு சிறிதுமற் றுலகிலுள உயிரெலாம்
இன்புற்று வாழவேண்டும்
இன்னுமோ ரன்னையெனக் கெய்தாமை வேண்டுமுனை
என்றுமற வாமைவேண்டும்
கன்னலுறை நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே
கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே. 9

மதியுதவு கல்வியை வழங்குமற மேயறம்
மனமடங் குதலேதவம்
மன்னுயிரைத் தன்னுயி ரெனக்கருதுங் கருணையே
மறைபுகழு முத்திவாசல்
துதியுதவு மெய்யறிவை யறிவதே இன்பமாம்
தூய்மையுள மாசிலாமை
துறவெனப் படுவதும் வேண்டாமை யேசுகம்
சும்மா டருப்பதேயாம்
விதியுதவு டம்பினிற் புகழுடம் பேதலை
விரதமுயர் மெய்விடாமை
மெய்கண்ட தெய்வநீ யேஎன வுணர்ந்தனன்
வினைதீர்த்த விக்னவேந்தே
கதியுதவு நாச்சிக் குறிச்சியம் பதியில்வளர்
கரிமுகக் கருணைமுகிலே
கமலவர தரபாத கமலமற வருள்பாத
கமலவர கணநாதனே. 10

## வாழ்த்து

செந்தமிழ் வாழி என்றுந் திகழ்கண நாதன் வாழி
வந்தனை புரியும் வள்ளல் மகிழ்துரை சாமி வாழி
கொந்தலர் சோலை நாச்சிக் குறிச்சிமா நகரம் வாழி
உந்துநல் லறங்க ளோங்கி உலகெலாம் வாழி வாழி.

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | அச்சில் |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. 1-00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற் படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | ரூ. 2-50 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | அச்சில் |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்ருவது தொகுதி (மூன்ருவது படைவீடு—பழநி) | ரூ. 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலே) | ரூ. 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோருடல் முதற்பாகம் | ரூ. 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆரும் தொகுதி (குன்றுதோருடல் இரண்டாவது பகுதியும். பழமுதிர் சோலேயும்) | ரூ. 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. 0-50 |
| 13. | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. 0-50 |
| 17. | அநசூயை (வரலாறுகள்) | ரூ. 1-00 |

---